# ஞான சாதனை





-அருட்பெருஞ்ஜோதி அடிகள்-

புத்தகம் கிடைக்குமிடம் :

வள்ளலார் சத்சங்கம்,
மனை எண் 2102, பழைய 'Y' பிளாக்
13வது பிரதான சாலை,
அண்ணா நகர், சென்னை-600 040.

# சன்மார்க்க விண்ணப்பம்

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே!

தேவரீர் அருள் உருவாகி எங்கள் அகத்தும் புறத்தும் அமர்ந்தருளி யாங்கள் செய்யும் சன்மார்க்க திருப்பணியில் எவ்விதத்தாலும் யாதொரு தடையும் வராதவண்ணம் செய்வித்து, அத்திருப்பணியை முற்றுவித்து அருளல் வேண்டும்.

சர்வ வல்லபராகிய தனித்தலைமைக் கடவுளே!

அத்திருப்பணி முற்றிய தருணத்தே தேவரீர் அமர்ந்தருளி அற்புதத் திருவருள் விளக்கத்தால் எங்களையும் இவ்வுலகில் இத்தேகத்தைப் பெற்றவர்களையும் உண்மை அடியார்களாக்கி, உண்மை அறிவை விளக்கி, உண்மை இன்பத்தை அளித்துச் சமரச சுத்த சன்மார்க்க நிலையில் வைத்துச் சத்திய வாழ்வை அடைவித்து நித்தியர்களாக்கி வாழ்வித்தல் வேண்டும்.

எல்லாமுடைய அருட்பெருஞ்ஜோதி அற்புதக் கடவுளே!

இது தொடங்கி எக்காலத்தும் சுத்த சன்மார்க்கத்தின் முக்கியத் தடைகளாகிய சமயங்கள், மதங்கள், மார்க்கங்கள் என்பவற்றின் ஆசார சங்கற்ப விகற்பங்களும்—வருணம் ஆசிரமம் முதலிய உலகாசார சங்கற்ப விகற்பங்களும் எங்கள் மனதில் பற்றுதவண்ணம் அருள் செய்ய வேண்டும். சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய லட்சியமாகிய ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமை எங்களுக்குள், எக்காலத்தும் எவ்விடத்தும், எவ்விதத்தும் எவ்வளவும் விலகாமல் நிறைந்து விளங்கச் செய்வித்தருளல் வேண்டும். எல்லாமாகிய தனிப்பெருந்தலைமை அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே! தேவரீர் திருவருள் பெருங் கருணைக்கு வந்தனம்! வந்தனம்!

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க!

# முன்னுரை

ஆன்ம நேயர்களே!

எல்லாம் வல்ல எங்கும் நிறைந்த, எல்லாவற்றிற்கும் தானே ஆதாரமான தனக்கு ஒரு ஆதாரமும் தேவையற்ற, இறைவனாகிய அருட்பெருஞ்ஜோதி பதி நம்முள்ளும் இருந்து கொண்டு நம்மை இயக்குகின்றார் திருவருளால் இவ்வுண்மையை உணர்ந்து ஆண்டவரின் இயற்கையின்பத்தை பெறுவதற்காகவே இம்மனிதப் பிறவியை நாமெல்லோரும் அடைந்துள்ளோம் ஈடுஇணையற்ற இவ்வியற்கை இன்பத்தினால் நமக்குக் கிடைக்கும் பேரின்ப சித்திப்பெருவிழாவிற்கு ஆன்ம இலாபம் என்று பெயர். இவ்வான்ம இலாபத்தை இம்மனித ஆயுள் உள்ள போதே அறிந்து அடைதல் அவசியம். இந்த ஆன்ம இலாபத்தை முழுமையாக அடைவதற்கான ஞானசாதனையை, கடந்த பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த (இப்பொழுதும் தோன்றாத் துணையாக நம்மோடு வாழும்) அருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகள் அவர்கள் வெளிப்படுத்தியுள்ளார்கள். இஞ்ஞான சாதனையை நாம் எல்லோரும் வாழ்க்கையில் கூடிய வரை கடைபிடித்து மேம்பாடு அடைவோமாக! மேலும்

மனித எல்லைக்கு அப்பாற்பட்ட கடவுள் அனுபவ நிலைகளை ஒலியின் வரி வடிவங்களாகிய எல்லைக்குட்பட்ட எழுத்துக்களின் வாயிலாக முழுமையாக வெளிப்படுத்தி விடமுடியாது. எனினும் திருவருட் துணையால் கூடியவரை எழுத்துக்களில் நாம் ஓரளவு வெளிப்படுத்தியுள்ளோம். எனவே, இஞ்ஞான சாதனையையும் அவரவர் பரிபாகத்திற்கு தக்கபடி விளங்கிக் கொண்டு, கிடைத்த ஞான விளக்கத்திற்கு ஏற்றபடி நடைமுறையிலும் இச் சாதனையைக் கடைபிடித்து வாழ்வது அவசியம், இஞ்ஞான சாதனையின் முதிர்ச்சியை அடைந்து முழுமையான ஆன்ம இலாபம் பெற, ஆசானின் அறிவுரைகளைக் கொண்டு நாம் எல்லோரும் நெற்றி நடுக்கண்ணாகிய ஞானக்கண்ணைத் திறந்து கொள்வோமாக!

—ஆசிரியர்

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க

# ஞான சாதனை

மனித உயிர்கள் மூன்றுவித பக்குவத்தில் உள்ளன. அதாவது, (1) அபக்குவ உயிர்கள், (2) பக்குவாபக்குவ உயிர்கள் (3) பக்குவ உயிர்கள். இவற்றை வள்ளலார் அவர்கள் அருட்பா வசன பாகத்தில் கூறுவது,

"ஆகாசம் அனாதி. அதுபோல் அதற்குக் காரணமான பரமாகாச சொரூபராகிய கடவுள் அனாதி. அனாதியாகிய ஆகாயத்தில் காற்றும் அனாதி. அனாதியான வெளியில் காற்று எப்படி அனாதியோ, அப்படிக் கடவுளிடத்தில் அருட்சத்தி அனாதியாய் இருக்கின்றது. ஆகாயத்தில் அணுக்கள், நீக்கமற நிரம்பியிருக்கின்றன. இதுபோல் கடவுள் சமூகத்தில் — ஆன்மாகாசத்தில் அணுக்கள் சந்தான மயமாய் நிரம்பியிருக்கின்றன. அந்த அணுக்களுக்கு ஆன்மா என்றே பெயர்.

பூதாகாயத்தில் இருக்கும் சாதாரண அசாதாரண அணுக்கள் ஏழு வகையாய்ப் பிரியும். அவையாவன:— (1) வாலணு (2) திரவவணு (3) குருவணு (4) இலகுவணு (5) அணு (9) பரமாணு (7) விபுவணு. மேற்படி அணுக்கள் அனந்த வண்ணபேதமாய் இருக்கும். இவற்றில் (1) காரியவணு (2) காரியகாரணவணு (3) காரணவணு என மூன்று வகையாய், பக்குவ, அபக்குவ, பக்குவாபக்குவ மென நிற்கும் இவைபோல் ஆன்மாகாயமான கடவுள் சமூகத்தில் ஆன்மாக்களும் மூவகையாய் நிற்கும். யாவை யெனில்—பக்குவ ஆன்மா, அபக்குவ ஆன்மா, பக்குவா பக்குவ ஆன்மா என மூவகைப்படும். ஆகாயத்திலிருக்கும் அணுக்கள் மூன்று விதமானதற்குக் காரணம் அங்குள்ள காற்றேயாம். அதுபோல் ஆன்மாக்கள் மூவிதமான

தற்குக் காரணம் கடவுள் சமூகத்திலுள்ள அருட்சத்தியே யாம்.”

மனிதர்களின் உயிரும் பிராணா அபக்குவ நிலையிலுள்ள சிலேத்தும நாடியோடுகூடி மார்பு சக்தியும் நீரின் கூறாகிய இதுசுழுத்தி அவத்தை எனப் பெயர். ஸ்தானத்தில் நிற்கும் பிண்டப் பகுதியினர். பரதந்திரர்களாகிய இவர்கள பக்குவ நிலையி கலந்த பக்சவா அபக்குவமும் பக்குவமும் பிராணசத்தியும காற்றின் லுள்ள மனிதர்களின் உயிரும கூடி கழுத்து ஸ்தானததில் கூறாகிய வாதநாடியோடு அவத்தை என்று பெயர். நிற்கும் இதற்த சொப்பன பக்குவ இவர்கள் சுதந்திரர்களாகிய கணடப பகுதியினர். உயிரும் பிராண சகதயும் நிலையில் உள்ள மனிதர்களின் பித்த உஷணத்தோடு கூடி லலாட நெருப்பின் கூறாகிய ஸதானததில் (புருவ மததி) நிறகும இதற்கு ஜாககிர அவத்தை என்று பெயா. சிவ சுதந்திரர்களாகிய இவர் கள் அண்டப் பகுதியினர்.

இதை வள்ளலார் திருவருட்பாவில்—

“அவஸ்தை மூன்று—ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, இவற்றில் உள்ளம் பித்த உஷ்ணத்தோடுகூடி லலாட ஸ்தா னத்தில் நிற்பது ஜாக்கிரம், சொப்பனமாவது —உள்ளம் வாத நாடியோடு கூடி கண்டஸ்தானததில் இருப்பது; சுழுத்தியாவது — உள்ளம் சிலேத்தும நாடியோடு கூடி மார்பு ஸ்தானத்தில் நிற்பது” என்று விவரிக்கிறார்.

பிண்டப் பகுதியருக்கு முழு நித்திரையும், கண்டப் பகுதியருக்கு நிததிரை அல்லது துயிலும (பக்குவா பக்கு வததற்கு ஏறறவாறு), அண்டப் பகுதியருககு முழு விழிப்பு நிலையும கூடி அமையும.

அபக்குவிகள் ஊழ்வழி செல்பவர்கள். பக்சவா பக்குவிகள் உணர்வு வழி செலபவர்கள். இவ்விரு

வகையினர் செய்யும் செயலுக்கும் ஆண்டவர் சாட்சியாக இருப்பார். பக்குவிகள் அறிவு மற்றும் அருள்வழி நிற்பவர்கள். இவர்கள் இறைச் செயலுக்குத்தான் சாட்சியாக இருப்பார்கள். ஆனால் இந்த மூவகை உயிர்களுக்கும் பொதுவாகக் காலை 4 மணி முதல 6 மணி வரை உயிரும் பிராண சகதியும் புருவ மததியில் சஞ்சரிக்கும் பிரம்ம முகூர்த்தம் என்று சொல்லக்கூடிய இக்காலை நேரத்தில் கடவுட் சிந்தனையாகிய புருவ மத்திய தியானத்தில் இருந்தால இவ்வண்டத்தில அமுதக் காற்று வியாபகமாயுள்ள இத்தருணத்தில நாம் இதுவரை அறியாததான கடவுள் விளக்கம் உண்டாகும். இவ்விவரங்களை வள்ளலார் விவரிப்பது—"இவ்வுலகமும் இவ்வுலகத்திலுள்ள சராசர பேதங்களில் முக்கியமாயுள்ள சரமாகிய ஜீவராசிகளும் கற்ப பேதமும் தோன்றி உய்யும் பொருட்டு, அனேக வித வாயு பேதங்கள் அநாதியில கடவுளால் உண்டுபண்ணப் பட்டிருக்கின்றன அவற்றில முக்கியமானவை அமுதக் காற்றும், விஷக்காற்றும். அவை விசேஷ வியாபகமாய் இருந்து கொண்டிருக்கின்றன.

இவற்றில் அமுதககாற்று—பிரமாண்ட பகிரண்ட கடாகத்தில்—விசேஷ வியாபகமாயும், இம்மகா அண்டத்திலும் ஏகதேச வியாபகமாயும் இருக்கின்றது.

விஷக்காற்று—மேற்படி பிரமாண்டாதி கடாகத்தில்—ஏகதேசம் நிமிஷகாலம் அல்லது முகூர்த்தம், அசாதாரணத்தில் ஜாமம் வரையில—வியாபகமாயும், இம்மகா அண்டாதி ஜீவராசிகளிடத்தில விசேஷ வியாபகமாயும், இருந்து கொண்டிருக்கின்றது

பிரம்மாண்டாதிகளில் அமுதக் காற்று வியாபகமாயுள்ளதால், அவ்வண்டங்களிலுள்ள சூரிய, சந்திர, உடுக்கள் முதலியவைகளும் நீண்ட காலத்தில் அழிவடைத

வின்றி இருக்கின்றன. விஷக்காற்று ஏகதேச வியாபக மாதலால் கற்பகாலத்தில் வியாப்பியமாயும், வியாபகமா யும் இருத்தலாலும் அந்தக் காலங்களில் இவை நஷ்டப் படுகின்றன.

மேற்படி விஷக் காற்று — கருமை வண்ணமாயும் செம்மை வண்ணமாயும் இரண்டு பாகமாய்ப் பிரியும். இவைகளை இராகு கேதுக்கள் என வழங்குகின்றனர். இது ஒரு முகூர்த்தம்—ஒரு ஜாமம் இருக்கும், அதற்குமேல் இவ்வண்ணமாய், இவ்வண்ட கணிதப்படி, அவ்வண்டங் களில் கணித காலத்தில் வியாபகமா யிருப்பதுதான் சந்திராதித்த கிரகண தோஷ காலம்,

தோஷ காலம் என்பது — பிரகாசமின்றி இருள் வண்ணமாய்ச் சில காலத்தில் முற்றும் மறைந்தும், சில காலத்தில் ஏக தேசம் மறைந்தும் இருப்பதால்: இவ் வண்ட புருஷனுக்குக் கரண ஸ்தானமாகிய சந்திரனும், ஜீவஸ்தானமாகிய சூரியனும், பிரகாசம் மழுங்குகின்ற படியால் தோஷம் எனப் பெயர். மேலும் தோஷம் என்பது இருள், அறியாமை, அஞ்ஞானம், விஷக்காற்று வியாபகமாயுள்ளது. இவ்வண்டத்திலும் ஜீவர்களிடத் திலுமாதலால், ஜீவகோடிராசிகள் சொல்பத்தில் அடிக் கடி நஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றன.

அமுதக் காற்று இவ்வண்டத்தில் இரவில் அருணோ தயந் தொடங்கி உதய பரியந்தம் வியாபகமாய் இருக் கின்றது. அக்காலத்தில் ஜீவர்கள் நன் முயற்சியிலிருப்பது விசேஷம்—நலம். தேகாதி பிண்டத்தில் மேற்படி அமுதக் காற்று வியாப்பியமாய்இருக்கும். ஒரு கால் ஒரு க்ஷண நேரம் அந்தக் காற்று வியாபகமாய் இருக்குங்கால் ஜீவர் களுக்கு இது வரையில் தாங்கள் அறியாததான கடவுள் விளக்கம் உண்டாகும். மேற்படி காற்று வியாபகம் ஏக தேசமுமில்லாவிடில், ஜீவர்கள் விஷக்காற்றினால் சதா

வியாபகமடைதலில் இந்த சொல்ப ஜீவிப்புக்கு வருத்திக்கு வரமாட்டாது. அமுதக்காற்று வியாப்பியமன்றி வியாபகமாய் இருக்குங்காலத்தில், ஜீவர்களுக்கு அறிவு விளக்கம், மன நெகிழ்ச்சி, இந்திரிய அடக்கம், ஈசுவர பக்தி முதலியனவும் விளங்கும். அக்காலத்தை அமுதக் காற்றின் வியாபகக் காலம் என்றறிய வேண்டும். இதன்றி, இருள் மயமாய் முன்பின் தோன்றாது அறிவின்றி இருக்குங் காலம் விஷக்காற்று வியாபகமாய் இருக்குங்காலமென்று அறிய வேண்டும்''

கடவுள் விளக்கம் — அருட்பெருஞ்ஜோதி என்பதும் தனிப்பெருங்கருணை, அதாவது உயிர்கள்பால் உள்ள இரக்கம் பற்றி இறைவன் ஞான நடம் புரிதல், என்பதும் வேறு வேறு அல்ல. ஜோதி என்பது விளக்கம் அல்லது புற நிலை: கருணை என்பது உருக்கம் அல்லது அக நிலை. இவ்விரண்டையும், மலரையும் அதன் மணத்தையும் எப்படிப் பிரிக்க முடியாதோ, அதுபோல் வேறு வேறாகப் பிரிக்க முடியாது. இப்படி அகம்புறம் என்று பிரித்துப் பார்க்காமல் சேர்த்து ஒன்றாகப் பார்ப்பது அனகநிலை, கடவுளின் புறநிலை அல்லது வடிவம் அருட்பெருஞ்ஜோதி அகநிலை அல்லது உயிர் தனிப்பெருங் கருணை (அருள்) உடமைகள் ஆண்டவர் செயல்படுதல், பிரபஞ்சம் முழுவதும் உள்ள எல்லா அசையும் மற்றும் அசையாப் பொருள்களுமாகும். இம்மூன்றும் சேர்ந்தது கடவுளின் எல்லையற்ற அல்லது பூரண (பெரிய) நிலை ஆண்டவனின் பிரதி பிம்பமாக நாம் படைக்கப் பட்டிருப்பதால், நம்முடைய புற நிலை அல்லது வடிவம் உடல்; அகநிலை அல்லது உயிர் ஜீவன் உடமைகள், நம் உபயோகத்திற்காக அருளாளளிக்கப்பட்ட புறப் பொருட்களாகிய ஆகாரம், இருப்பிடம், உடை முதலியவைகளாகும். இம்மூன்றும் சேர்ந்தது நம்முடைய எல்லைக்குட்பட்ட அல்லது இயற்கை உண்மை ஏக தேச (சிறிய) நிலை,

இந்த எல்லைக்குட்பட்ட சிறிய நிலையில் அறிவு மிகக் குன்றிய அளவில் செயல்படுகிறது. ஆனால் எல்லையற்ற அனந்த நிலையில் அறிவு மிகப் பெரிய அளப்பரிய நிலையில் செயல்படுகிறது. எல்லைக்குட்பட்ட சிறிய மனித நிலையி லிருந்துதான் எல்லைக்கு அப்பாற்பட்ட கடவுள் நிலையை அடைய வேண்டியதாயிருக்கின்றது. ஆகையால் நம் உடல், உடமைகள், உயிர், ஆகியவற்றைக் கடவுளின் உடல். உடைமைகள்; உயிர், ஆகியவனவாக மாற்றிக் கொண்டு விட்டால் எல்லையற்ற அறிவு செயல்படும், ஆனால், இதை மாற்றியமைக்கக் கூடிய ஆற்றல் கடவு ளிடம்தான் உள்ளது. இதை வள்ளலார் பாடல்களில் கீழ்க்கண்டவாறு வெளிப்படுத்தியுள்ளார்;-

"இப்பாரில் உடல் ஆவி பொருளும் உன்பால
கொடுத்தேன் மற்றெனக்கென்று இங்கு
எப்பாலும் சுதந்திர போர் இறையுமில்லை
அருட்ஜோதி இயற்கை என்னும்
துப்பாய உடலாதி தருவாயோ
இன்னும் எனைச் சோதிக்கப் பாயோ
அப்பா நின் திருவுளத்தை அறியேன்
இவ்வடியேனால் ஆவதென்பன" (82)

படமுடியாது இனித் துயரம் படமுடியாதரசே
பட்டதெலாம் போதும் இந்தப் பயந்தீர்த்து
இப்பொழுதுஎன்

உடலுயிராதிய எல்லாம் நீ எடுத்துக்கொண்டு
உன் உடலுயிராதிய எல்லாம் உவந்து
எனக்கே அளிப்பாய்

வடலுற சிற்றம்பலத்தே வாழ்வாய்
என் கண்ணுள் மணியே என்குருமணியே
மாணிக்க மணியே

நடனசிகாமணியே என் நவமணியே
ஞான நன்மணியே பொன் மணியே
நடராஜ மணியே'' 138

''உத்தம மாகுதுந் திருச்சமு கத்தென் உடல்
பொருளாவியை யுவப்புடனளித்தேன்
இத்தகை யுலகிடை யவைக்குமென்றனக்கும்
ஏதுஞ் சுதந்திரமில்லையிங்கு இனிநீர்
எத்தகை யாயினுஞ் செய்து கொள்கிற்பீர்''

''தோணையென் உடல்பொருளாவியும் நுமக்கே
கொடுத்தனன்''
''தனிப்பெருந் தேவரீர் திருச்சமுகத்தே
உகந்தெனது உடலொடுபொருளாவியை நுமக்கே
ஒருமையின அளித்தனன்''
''வான்முத லெங்கணும அறிய என் உடலாதியை
யீந்தனன் நுமக்கே
எப்படியாயினும் செய்து கொள்கிற்பீர்''
''...சமுகத்தென் வண பொருளாதியை நண்பொடு
கொடுத்தேன்''

''என்னுடலாதியை நுமக்கே அன்புடன் கொடுத்
தனன் ஆண்டவரே நீர் ஏய்மட்டி லெப்படி யேனுஞ்
செய்கிற்பீர்''

''எத்திக்கு மறியவென் னுடல் பொருளாவி
என்பவை மூன்றும் உள் அன்போடு கொடுத்தேன்''
''என்னுடலாதியை நுமக்கே தந்தனன்
திருவருட் சந்நிதி முனனே''
''என்னுடலாதியை நுமக்கே நிச்சயந் தந்தனன்
என்வச மின்றி நின்றனன்''
''மூவகையாம் உடலாதியை நுமது பொன் செய்து
கொண்ட பொதுவனில்லாடும் பொன்னடி காணப்
பொருந்திக் கொடுத்தேன்''

"உன் கடன் அடியேற் கருளல்என் றுணர்ந்தேன்
உடல் பொருளாவியும் உனக்கே பிழை கட்னின்றிக்
கொடுத்தனன்"

"என்பொருள் என்னுடல் என்னுயி ரெல்லாம்
ஈந்தனன் உமிடத் தெம்பெருமானீர் இனபொடு
வாங்கிக் கொண்டென்னை ஆட்கொண்டீர்."

இதையே "சத்திய விண்ணபபத்தல்" கீழ்க்கண்ட வாறு கூறுகிறார்:—

"திருவருட் சுதந்திரம் நமக்கு எந்த வழியால் கிடைக்கும் என்று அறியத் தொடங்கிய தருணத்து—

எனது யானென்றும், தேக சுதந்திரம், போக சுதந்திரம், ஜீவ சுதந்திரம் என்னும் மூவகைச் சுதந்திரங்களும் நீங்கியவிடத்தே கிடைக்குமென்று தேவரீர் திருவருளால் அறிவிக்க உள்ளபடி அறிந்தேன், ஆதலில், எனது சுதந்திரமாகக் கொண்டிருந்த தேக சுதந்திரத்தையும், போக சுதந்திரத்தையும், ஜீவ சுதந்திரத்தையும், திருவருட்கே சர்வ சுதந்திரமாகக் கொடுத்து விட்டேன். கொடுத்த தருணமே இத்தேகமும், ஜீவனும், போகப்பொருள்களும், சர்வ சுதந்திரராகிய கடவுள் பெருங்கருணையாற் கொடுக்கப் பெற்றனவன்றி நமது சுதந்திரத்தாற் பெற்றனவல்ல என்னும் உண்மையை அருளாலறிவிக்கவும் அறிந்து கொண்டேன். இனி, இத்தேகத்தினிடத்தும், ஜீவனிடத்தும் போகப் பொருள்களிடத்தும், தேவரீர் திருவருள் சாட்சியாக எனக்கு எவ்விதத்தும் யாதோர் சுதந்திரத் தோற்றமும் தோற்றமாட்டாது,

தேவரீர் திருவருட் சுதந்திரத்தை என்னிடத்தே வைத்தருளி, மரணம், பிணி, மூப்பு, பயம், துன்பம் முதலிய அவத்தைகளெல்லாவற்றையும் தவிர்த்து இத்தேகத்தையே நித்திய தேகமாக்கி, எக்காலத்தும் அழியாத பேரின்ப சித்திப் பெருவாழ்வில் என்னை வாழ்வித்தல் வேண்டும்"

இச் சாதனைக்கு ஞானயோகம் என்று பெயர். இதை தான் கடவுள் வள்ளலாருக்கு திருவருளை முழுமையாக அடைவதற்கு என்ன செய்வது என்று ஏங்கி நின்றபோது அறிவித்தார். இதைக் கீழ்க்கண்ட அருட்பாவின் மூலம் அறியலாம்:—

"வாட்டமொடு சிறியனேன் செய்வகையை
அறியாதுமனமிக மயங்கிய ஒரு நாள
மண்ணிற்கிடந்து அருளையுன்னிஉலகியலினை
மறந்து துயில்கின்றபோது

நாட்டமுறு வைகறையில் என்னருகணைந்து என்னை
நன்றுற எழுப்பி மகனை நல்யோக ஞானமெனினும்
புரிதலின்றி நீநலிதல் அழகோ எழுந்தே ஈட்டுக
நின் எண்ணம் பலிக்க அருள் முயல் உண்டு
இன்புறுக என்ற குருவே"

**கடவுள் வழிபாட்டு முறைகள்.**— உயிர்கள் மூன்று வித பக்குவத்திலுள்ளதால அபக்குவிக்கு ஜோதி வழிபாடும், பக்குவா பக்குவிக்குப் பரமார்க்க வழிபாடும், பக்குவிக்கு சாதனை ஒன்றும் தேவையில்லாத அருள்விளக்கத்தால் அருட்செயல் கொண்ட சகஜ வாழ்க்கையும் தேவை, ஆகையால பசி, பயம், தூக்கம், மையல் இவைகளைச் சாத க்த்தால. ஒழுக்க நினைத்தால் தத்துவ கூட்டங்களாலான உடலுக்குக் கெடுதல் ஏற்படும், சதா கருணை நன் முயற்சி யால் பக்குவத்தால் நீக்கிக் கொள்வது நலம். இது இயற் கை வழி, மற்றது செயற்கை வழி ஆகையால் சாதகத்தால் செயற்கை முறையில் இவற்றைத் தவிர்க்க முயற்சிப்பது ஒடுக்கத்தை ஏற்படுத்தும். இயற்கை முறையில தவிர்த் தால் நீக்கம் உண்டாகும், ஆகையால் முகவும் விழிப்புடன் நடந்துகொள்ள வேண்டும். இதை அருட்பாவல் வெளிப் படுத்துவதை காண்போம்.

"அன்பிலே அன்பர் கொடுத்தவை யெல்லாம்
ஐயகோ தெய்வமே யிவற்றால்
வன்புறச்செய்யேல் என்று உளம் பயந்து வாங்கி
உண்டிருந்தனன் எந்தாய்"

"இருளிரவில் ஒரு மூலைத்திண்ணையில் நான் பசித்தே
இளைப்புடனே படுத்திருக்க எனைத்தேடி வந்தே
பொருள் உணவு கொடுத்து உண்ணச் செய்வித்தே
பசியைப் போக்கி அருள் புரிந்த என் புண்ணிய
நற்றுணையே

"நான் பசித்தபோதெல்லாம் தான் பசித்ததாகி
நல்லுணவு கொடுத்தெனைச் செல்வமுற வளர்த்தே
ஊன் பசித்த இளைப்பு ஒன்றும் தோன்றாத வகையே
ஒளிய தெள்ளமுது எனக்கிங்கு உவந்தளித்த
ஒளியே",

என்று பசிவந்தபோது உணவுஉண்டதையும

"விழுந்துறு தூக்கம வரவது தடுத்தும
விட்டிடா வன்மையாற் தூங்கி
எழுந்தபோதெல்லாம் பயத்தொடும் எழுந்தேன்

"பகலிர வெல்லாம் தூக்கமே கண்டனன் தூக்கம்
வந்த போதெல்லாம் பயத்தொடுப் படுத்தேன் மற்று
நான் எழுந்த போதெல்லாம் தொந்தமாம் பயத்தாற்
சிவ சிவ தூக்கம் தொலைவதெக்காலம் என்
றெழுந்தேன்"

என்று பயங்கொண்டபோது பயத்தையும், தூக்கம் வந்த போது தூங்கி எழுந்ததையும்,

"முன்னொடு பின்னு நீதரு மடவார் முயக்கினிற்
பொருந்தினேன்"

"ஒரு மடந்தை வலிந்தணைந்து கலந்து அகன்றாள்"

என்று மையல் கண்டபோது மடந்தையரோடு பொருந்தியதையும் கூறுகிறார்.

**உடலின் அருமை :** இம்மனித உடம்பு கடைசிவரை இருந்தால்தான் ஞான சித்தி அடைய முடியும். ஆகையால், இவ்வுடம்பைப் பொன்போல் பாதுகாக்க வேண்டும். உடலுக்குத் தத்துவக் கெடுதிகளால் ஏற்படும் பிணி, மூப்பு, பயம், துன்பம், மரணம், முதலியற்றை திருவருட் துணையுடன் கூடிய ஞான சாதனையைக் கொண்டும் ஆகாரப் பக்குவத்தாலும் நீக்கிக் கொள்ள வேண்டும். இதற்கு கீழே சில அறிவுரைகள் கொடுக்கப் பட்டுள்ளன. இவற்றை கூடிய வரை நடை முறையில் கடைப்பிடிக்க வேண்டும்'

**உடலைப் பேணிகாக்க ஆகாரப் பக்குவம் மற்றும் அறிவுரைகள்:—**

1· உடல் சீக்கிரம் நஷ்டமடைவதற்குக் காரணம் இரண்டு அதாவது (அ) அருந்தல் (உணவு) (ஆ) பொருந்தல் (சிற்றின்பம்) ஆகையால் இவற்றில் அளவோடு இருக்கவேண்டும்.

2. அருந்தல்-இருள் நிலையில் உண்டாகும் தாமச ஆகாரமாகிய புலாலையும், இராஜச அகாரமாகிய கிழங்கு வகைகளையும் நீக்கி ஒளி நிலையில் விளையும் சுத்த சத்துவ ஆகாரத்தைப் பசியெடுக்கும் போது மட்டும் உண்டு ஆயுளை நீடிக்கிச் செய்து கொள்ளல் வேண்டும்.

3. பொருந்தல்—இதில் ஊற்றுக் கிணறு ஞாயத்தைக் கடை பிடிக்க வேண்டும், அதாவது அதிகமாக சுக்கிலத்தைச் செலவு செய்யாமலும், அறவே செலவு செய்யாமலும் இல்லாமல், மாதம் இருமுறை மாத்ரைப் புல்குதல் என்ற முறையைக் கடைபிடித்து ஆயுளை நீடிக்கச் செய்து கொள்ள வேண்டும். அதி தீவிர பக்குவிகள் இதையும்

விடுத்து கடவுளிடத்தில் அன்பும், ஜீவர்களிடத்தில் தயவும் கொள்ளல் வேண்டும். மற்றும் தேக கலப்பு செய்யும் போது பகலில் செய்யாமல் இரவில் மட்டும் செய்ய வேண்டும்.

4. மேலும் தேகம் நீடிக்க கரிசாலை மற்றும் தூதுவளை இலைகளைப் பச்சையாகவாவது, சமையல் செய்தாவது, தினம் தவறுமல் உட்கொள்ளவேண்டும். இது புறவுடம்பாகிய தூல தேகத்தை மட்டுமல்லாமல் முக்கியமான உள்ளுடம்பாகிய இலேசான சூக்கும தேகத்தை நீடிக்கச் செய்யும்.

5. ஆணுக இருந்தால் (அ) சிரநடு அல்லது உச்சி (ஆ) தொப்புள் (இ) கோசம் ஆகிய அவயவங்களையும், பெண்ணுக் இருந்தால் (அ, உச்சி (ஆ)ஸ்தனங்கள் (இ)தொப்புள் (ஈ)குய்யம் முதலிய அவயங்களை மறைத்தல் வேண்டும்.

(6) சூரியோதயத்திற்கு முன் தூக்கம் நீங்கி எழுந்து உட்கார்ந்து சிறிது நேரம் கடவுள் சிந்தனையில (தியானத்தில்) இருக்க வேண்டும்,

7. மல ஜல உபாதைகளை நேரும்போது அப்போதே மல ஜல சங்கற்பத்துடன் வேறு விஷயங்களை நினையாமல் சிறிதும் அசட்டை செய்யாமல் முழுமையாக நீக்கிக் கொள்ளல் வேண்டும். மலம் கழிக்கும போது வலது கையால் இடது பக்கம் அடி வயிற்றையும்' ஜலம் கழிக்கும் போது இடது கையில் வலது அடி வயிற்றையும் பிடித்திருத்தல் வேண்டும், மலம தடைபடுமானுல் இடது பக்கமாகச் சற்றுப் படுத்து பிராண வாயுவை வலது பக்கம் வரும்படிச் செய்து கொண்டு, மல சங்கற்பத்தோடு மலம் கழித்தல் வேண்டும். ஜலம் தடைப்பட்டால், வலது பக்கமாகச் சற்றுப படுத்து பிராண வாயுவை இடது பக்கம் வரும்படிச் செய்து கொண்டு, ஜல சங்கற்பந்துடன் ஜலம் கழித்தல் வேண்டும்.

8, காலையில் இளம் வெய்யில் தேகத்தில் படாத வாறு எட்டு மணி வரையில் உடலைப் போர்வையால் மூடி காக்க வேண்டும்.

9. குளிக்கும் போது இளம் வெந்நீரிலேயே குளிக்க வேண்டும்.

10, பசி எடுக்கும் போது சுத்த சத்துவ ஆகாரம் உண்ட பின்பு, சுத்தமான வெந்நீரையே குடித்தல் வேண்டும்.

11. பேயன் வாழைப்பழம் அல்லது ரஸ்தாளி வாழைப்பழம் மட்டும்தான் அடிக்கடி உட்கொள்ளல் வேண்டும் மற்ற பழ வகைகளைக் கூடிய வரையில் தவிர்த்தல் வேண்டும்.

12 ஒளி நிலையில் விளையும் சுத்த சத்துவ காய்கறி வகைளான, கத்திரிக்காய், வாழைக்காய், அவரைக்காய், முருங்கைக்காய், பீர்க்கங்காய், பூசனிக்காய். கொத்தவ ரங்காய், கீரை வகைகள் இவற்றையே சமையல் செய்து சாப்பிட வேண்டும். இவற்றைச் சமைக்கும் போது, புளி, மிளகாய், உப்பு ஆகியவற்றை குறைவாகச் சேர்த்தல் வேண்டும்; மிளகு, சீரகம் ஆகியவற்றை அதிகமாகச் சேர்த்தல் வேண்டும்.

13. அடிக்கடி உண்ணுமல் எப்பொழுதாவதுதான் கீழ்க்கண்ட ஆகார வகைகளை உட்கொள்ளலாம் :—வடை, தோசை, அதிரசம், மோதகம், சர்க்கரைப் பொங்கல், அப்பம், தயிர்சாதம், புளிச்சாதம், நெய்.

14. எவ்விதத்திலும் எப்பொழுதும், புலால் சாப்பிடு வதைத் தவிர்த்தல் மிக அவசியம்.

15 பகலில் தூங்காமல், இரவில் தூங்க வேண்டும். படுக்கும்போது இடக்கை கீழிருக்கும்படியே எப்பொழுதும் படுக்க வேண்டும்.

16. காற்று மிகுந்தடிக்காமல், கடின வெய்யில் கடின மழை இல்லாதபோது சாயங்கால வெய்யில உட லிறபடும்படி வெளியே சற்று உலாவுதல் வேணடும்.

17. இரவுச் சாப்பாடு, பகற் சாப்பாட்டைவிடக் குறைவாக இருத்தல் வேணடும். அதுவும, சிறு கத்தரி, முருங்கை, அவரை. வற்றல போன்ற சூடான பதார்த்தங் களையே சேர்த்தல் வேணடும்.

18. இரவு பத்து மணியளவில் பசுவின் பாலைக் காய்ச்சி அருந்தி விட்டு, 12 மணி வரை கடவுள் ஞாபகம் செய்து; பின்பு 3 அல்லது 4 மணி நேரம் மிருதுவாகத் தூங்க வேண்டும்.

19. கொலை, கோபம், சோம்பல், பொய், பொறுமை கடுஞ்சொல் முதலியவைகளைத் தவிர்த்து, எப்போதும மன உற்சாகத்தோடு இருந்து, எந்தவிதத்திலும பிராண வாயுவை (சுவாசத்தை) அதிகமாகச் செலவிடாமல் விழிப்புடன் இருத்தல் வேண்டும்.

20. இம்மானிட தேகத்தில் பிராண வாயு சுவாச மாக சாதாரணமாய் உள்ளே போவது 12 அங்குலம். ஆனால் ஓடும போதும, நடக்கும்போதும, வாந்தியாகும் போதும, சுவாசம் அதிக அளவற் போகும். சாதாரண மாக 12 அங்குலம் ஓடி 4 அங்குலம் கழித்து 8 அங்குலம் தான் நின்ற இடத்தில் நோக்கும், இப்படி சாதாரணமாக 4 அங்குலம் கழிந்தால் மனித ஆயுள் 120 வயதாகும். அதாவது மனிதர்களுக்கு ஒரு நாளைக்கு 27,600 சுவாசம் நடக்கும் போது 120 வருடம ஜீவித்திருக்கலாம். ஆனால் இப்பொழுது வாழும் நாம் இதைப் போல பல மடங்கு அதிகமாக, ஓடுவதாலும், நடப்பதாலும், தூங்குவ தாலும், உடலுறவு கொள்வதாலும், சாப்பிடுவதாலும், அதிகமாக சுவாசிப்பதால 120 வயதிற்குக் குறைவாகவே

வாழ்கிறோம். சாதாரணமாய் நாம் விடும் சுவாசம் எவ்வளவு குறைகிறதோ அவ்வளவு ஆயுள் அதிகமாகும்.

21. உடலில் எந்த செயதாலும் புருமமத்தியில் ஞாபகம் வைத்து கடவுட் சிந்தனையிலேயே செய்தல் வேண்டும்

22. ஆகாரம் பாதி, தூக்கம் அதிற் பாதியிற் பாதி, சிற்றின்பம் அதற் பாதி, பயம் முழுவதும் அற்ற நிலையைப் பெறுதல வேண்டும.

23. எப்பொழுதும் மறப்பில்லாமல் ஆசானின் திருவடியை அல்லது கடவுள் ஞாபகம் செயதுக் கொண்டு, தூககத்தை நீக்கிக கொண்டு அல்லது குறைத்துக்கொண்டு வாழ்ந்தால சாகாக் கலவியை சுலபமாகக் கற்கலாம்.

24. இரவில் நாம் இருக்குமிடத்தல் தீபம் வைத்து இருளைப் போக்கி ஆனந்தமயமாயத் தூக்கம தவிர்த்து இருந்தால் ஆயுள் அதிகமாகும். ஆனல் ஞான சாதகன் ஒருவாறு நித்திரை செயதல வேண்டும.

25. நெற்றி நடுக்கண்ணை ஆசானின் அல்லது கடவுள் அனுக்கிரகத்தால் திறந்து கொண்டு ஞான வாழ்வு வாழ்ந்தால் எல்லா உயிர் அனுபவங்களும் பட்டபகல் போல தெரியும். மேற்படி நடுக்கணணை மூடியுள்ள பூட்டியை ஒரு பூட்டு கொண்டு பூட்டியுளளது. அப்பூட்டை கடவுள் அருள் என்ற சாவியைக்கொண்டு திறந்த கொள்ளல் வேண்டும். அருள் என்பது ஆன்மாவின் இயற்கையாகிய பெருந்தயவு ஆகையால் நாம் தயவு வடிவமானல மேற்படி ஆயுளைப் பெறலாம.

26. புறக்கரணங்களாகிய :—

(அ) கணகளாற் கருணையோடு பார்க்க வேண்டும்.

(ஆ) காதுகளால் ஞானப் பேச்சுகளையும், பாட்டுகளையும், கடவுட் புகழையும் மட்டுமே கேட்க வேண்டும்.

(இ) நாசிகளால் நல்ல வாசனை, கெட்ட வாசனை முதலியவற்றை நுகராமல் இருக்க வேண்டும்.

(ஈ) நாக்கினால் உருசிபார்க்காமல் சத்துவ உணவை உண்ண வேண்டும்.

(உ) மெய்யால் மெய்யுணர்வையே உணர்தல் வேண்டும்.

(ஊ) வாயினால் இனிய வார்த்தைகள் பேசி, புறம் கூறாது ஞானப் பேச்சுகளையும், அருட்பாக்களையும், கடவுட் புகழையும் மட்டுமே பேச வேண்டும்.

(எ) கைகளினால் தன்னால் இயன்றவரை நற்காரியங்களுக்காகவே எடுத்தல், கொடுத்தல் செய்ய வேண்டும்.

(ஏ) கால்களினால் எப்பொழுதும் கடவுட் காரியங்கள் நடக்கும் இடங்களுக்கும், பெரியோர் எழுந்தருளியுள்ள இடங்களுக்கும், பிறர்க்கு உதவிசெய்யும் பொருட்டே செல்ல வேண்டும்.

(ஐ) எருவாயில் மலஜல உபாதைகளைக் கிரமமாக நீக்கிக் கொள்ள வேண்டும்.

(ஒ) கருவாயில் அக்கிரம அதிக்கிரமப் புணர்ச்சியின்றி மிதபோகம் செய்ய வேண்டும்.

இவற்றை வள்ளலார் அவர்கள் இந்திரிய ஒழுக்கம் என்று கூறுவர்.

27. சுத்த சன்மார்க்க சாதகர்கள் எப்பொழுதும் புழுக்காதிருக்கின்ற பொருள்களாகிய சர்க்கரை, தேன், கற்கண்டு, அயம் முதலிய செந்தூரம், தாமிரம் முதலிய பஸ்பம், ஆகியவற்றையே கொள்ளல் வேண்டும்.

28. உண்மையான கடவுள் ஒருவரே என்பது தெரிந்து, மனதை வேறு எங்கும் செலுத்தாமல், புருவ மத்தியில் நிற்கச்செய்து, பிறர் குற்றங்களை விசாரியாமல் இதர துர்விஷயங்களைப் பற்றுமல் இருக்க வேண்டும். செயற்கை குணங்களாகிய தாமச, இராஜச குணங்களால் உண்டாகும் வேண்டுதல் வேண்டாமையை நீக்கி இயற்கைக்குணமாகிய சத்துவ மயமாய் இருக்க வேண்டும். இதை வள்ளலார் கரண ஒழுக்கம் என்று குறிப்பிடுவர்.

**அருவ்சட்டம்:** தூல உடலோடு கூடிய மனிதப்பிறவி தவிர, மற்றப் பிறவிகளாகிய மிருகம், பறவை, புழு பூச்சி, தாவரம் முதலியவற்றிற்கு கொடுக்கப்பட்ட உடல் தண்டனை நிமித்தம் கிடைத்த உடலாதலால், அவ்வுடலைக் காப்பதற்கு அருள் நியதி ஆகாரம் மட்டும் உண்டு, எத்தனை காலம் அவ்வுடலோடு வாழ்ந்திருக்க வேண்டுமோ அவ்வளவு காலம் வாழ்ந்திருக்கலாம். ஆனுல் உயர் பிறப்பாகிய மனிதப்பிறவி எடுத்த நமக்கு ஊழ்வகையினுல் அருளநியதி ஆதாரம் மட்டும் உண்டு ஜீவித்து தேகத்தை வைத்திருக்க வேண்டுமென்பது அருள் நியதி அல்ல என்பதால், இது நன்மை, இது தீமை என்று பகுத்தறியும் சுட்டறிவின் துணை கொண்டும், சுதந்திரத்தைக் கொண்டும், இத்தேகத்திற்கு அளிக்கப்பட்ட கை, கால் முதலிய கருவிகளைக் கொண்டு உழைத்த ஆகாமிய முயற்சியால் ஈட்டிய பொருளைக் கொண்டு இத்தேகத்திற்கு அடிக்கடி நேருகின்ற மாயா ஜால விகற்பங்களாகிய பசி, தாகம், பிணி, இச்சை, எளிமை, பயம், கொலை முதலியவைகளால் ஏற்படும் அபாயங்களை கரணேந்திரிய உபகாரங்களைக் கொண்ட நம் சுட்டறிவைக் கொண்டு விழிப்புடன் முயற்சி செய்து தடுத்துக் கொள்வதற்குத் தக்க எல்லைக்குட்பட்ட சுதந்திரம் நமக்கு அருளாற் கொடுக்கப் பட்டிருப்பதால், அச்சுதந்திரத்தைக் கொண்டு இவ்வபாயங்களை நீக்கிக் கொண்டு ஆன்ம இலாபத்தைப் பெறுவதற்கு முயற்சி

செய்ய வேண்டும் என்பது அருள் நியதியாக கடவுளால் விதிக்கப்பட்டிருக்கிறது. இதை வள்ளலார் அருட்பாவில் இவ்வாறு கூறுகிறார்:—

"ஆன்மாக்களெல்லாம் இயற்கை உண்மை ஏக தேசங்களாயும் இயற்கை விளக்கமாகிய அருள் அறிவுக்கறிவாய் விளங்குதற்கு ஒற்றுமை உரிமை இடங்களாயும் இருக்கின்றனவென்றும், அந்த ஆன்மாக்கள் ஜீவன்களாகி அதிகரிப்பதற்குப் பூதகாரிய தேகங்களே உரிமையாக இருக்கின்றனவென்றும், அந்த தேகங்களில ஆன்மாக்கள் ஜீவர்களாகி அதிகரியாவிடில் ஆன்ம விளக்கம் மறைபடுமென்றும், அதனால் அருள் விளக்கம் வெளிப்படாது என்றும் அதுவே ஆன்மாக்களுக்கு பந்தமாகுமென்றும் அது பற்றி அவசியம் பூதகாரிய தேகம்வேண்டுமென்றும், பூதகாரிய தேகங்களுக்கு மாயை முதற்காரணமாதலால், அந்த மாயையின் விகற்ப ஜாலங்களாகிய, பசி, தாகம், பிணி, இச்சை, எளிமை, பயம், கொலை என்பவைகளால் அந்தத் தேகங்களுக்கு அடிக்கடி அபாயங்கள் நேரிடுமென்றும், அப்படி அபாயங்கள் நேரிடாமல கரணேந்திரிய சகாயங்களைப் பெற்ற தமறிவைக் கொண்டு சர்வ ஜாக்கிரதையோடு முயற்சி செய்து தடுத்துக் கொள்வதற்குத் தக்க அற்ப சுதந்திரம் ஜீவர்களுக்கு அருளாற் கொடுக்கப்பட்டதென்றும், அந்தச் சுதந்திரத்தைக் கொண்டு ஜீவர்களெல்லாம் தேகங்களிலிருந்து அபாயங்களை நீக்கி ஆன்ம லாபத்தைப் பெறுதற்குக் கடவரென்றும், ஊழ்வகையாலும், அஜாக்கிரதையாலும் பசி, தாகம், பிணி, இச்சை, எளிமை, பயம், கொலை என்பவைகளால் வரும் அபாயங்களை நிவர்த்தி செய்து கொள்ள மாட்டாமல் வருந்துகின்ற ஜீவர்கள் விஷயத்தில் அவைகளை நிவர்த்தி செய்விக்கத் தக்க சுதந்திரமுள்ள ஜீவர்கள் நிவர்த்தி செயவிக்க வேண்டும்"

**பரதந்திரர்களுக்கு வழிபாடு:**—அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின அருளால் எல்லாம் செயல கூடுமாதலால்

இத்திருவருளை அடைவதற்கு அபக்குவ நிலையிலுள்ள பரதந்திரர்களாகிய பிண்டப் பகுதியினர் முதலில் மனதை ஒருமைப்படுத்த ஜோதி வழிபாடாகிய தியானம் செய்ய வேண்டும்: அதாவது புறத்தில் மனம் அலைபாயாமற் செய்ய வேண்டும். இதற்கு சாதனம்—கண்ணாடி மற்றும் தீபம் கண்ணாடியைத் தூய்மையான உள்ளமாகவும் தீபத்தை திருவருட் சுடராகவும் பாவித்துப் பார்த்து முதலில் புருவமத்தியில் மனதைச் செலுத்திப் பழக, பழக தீப உருவம் கரைந்து அருவமாக அகத்தே அருள் ஒளி பாய்வதை உணரலாம். இதை ஒரு ஆசானின் துணை கொண்டு செய்ய வேண்டும். இதை வள்ளலார் அவர்கள்—

"ஸ்ரீமுக வருடம் கார்த்திகை மாதம் புனர்பூச நட்சத்திரத்தில் உள்ளிருந்த விளக்கைப் புறத்தில் வைத்து தடைபடாது ஆராதியுங்கள்" என்றும்,

"நாம் நெற்றியிலிருக்கும் நடுக்கண்ணை ஆசாரியார் அனுக்கிரகத்தால் திறக்கப் பெற்றுக் கொள்வது நலம். ஏனெனில், மேற்படி நெற்றிக் கண்ணைத் திறக்கப் பெற்றுக் கொண்டவனுக்கு எல்லா அனுபவங்களும் பட்டப் பகல் போல் தெரியும்" என்றும் திருவருட்பா வசன பாகத்தில் கூறுகின்றார் மற்றும்.

"தியானம் செய்ய வேண்டுமானால், ஏதாவது ஓர் உருவத்தைத் தியானிக்க வேண்டும். நிட்களமாயிருக்கப்படாது உருவமாக இருக்க வேண்டும். அருவமாக தியானிக்கப்படாது. பின் உருவம் கரைந்து அருவமாகும். துவைதமாக இருந்தால், அத்துவைதம் தானே ஆகும். எப்படியெனில் பார்க்கும். தான் கெடுவது அத்துவைதம், பார்க்கப்படும் பொருளும் கெடுவது அதீதம். சத்தியம்" எனவும் கூறுகின்றார். இதற்குப் பொருள், தான் இருப்பதும் தனக்கு புறம்பாக ஒன்று இருப்பதை அறிவதும் உணர்வதும் துவைதம் தன்னை மறந்து தனக்கு

புறம்பாக உள்ள பொருளை அறிந்து உணர்ந்து நிற்பது அத்துவிதம். இரண்டு நிலைகளும் கெட்டு நிற்பது இவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்ட அதீதம். இவற்றை

"கையறவிலாது நடுக்கண் புருவப் பூட்டு கண்டுகளிக்
கொண்டு திறந்துண்டு நடு நாட்டு"
"கண்களிக்கப் புகை சிறிதுங் காட்டாதே புருவக்
கலை நடுவே விளங்குகின்ற கற்பூர விளக்கே"
"இனித்த சுகம் அறிநது கொளா இளம்
பருவந்தனிலே என் புருவ நடு இருந்தான்"

என்னும் திருவருட்பா பாடல்களிலும் விளக்கிக் கூறியுள்ளார். இதற்கு ஜோதி வழிபாடு என்று பெயர். இந்த வழிபாடு எல்லா தேசத்தவர்கட்கும், எல்லா சமயத்தினருக்கும், எல்லா மதத்தினருக்கும், எல்லா மார்க்கத்தினருக்கும் ஏற்பட்ட பொதுவான ஒன்று. எல்லோரும் ஒன்று பட்டு வழிபடுதற்கு உரியது. இந்த ஜோதி வழிபாட்டுத் தியானத்தால், அமைதி உண்டாகும், அறிவு விளங்கும். மூச்சு சிதறாமல் சமநிலை பெறும். நாடிகள் பதைப் பற்று தேகம் தெம்புறும். மனம் சோர்வு நீங்கி செம்மையுறும். பயம் நீங்கும். காமக் குரோத உலோப மோக மத மாச்சர்யங்கள் நீங்கும். தேகசக்தி மனோ சக்தி அதிகமாகும், மேலும் உயிர்ப்பு சக்தி விசேஷித்து நாம் நீடித்த நித்திய வாழ்வு வாழ்வோம்.

சுதந்திரர்களுக்கு வழிபாடு :—இதையடுத்த பக்குவமும் அபக்குவமும் கலந்த பக்குவாபக்குவ நிலையிலுள்ள சுதந்திரர்களாகிய கண்டப் பகுதியர் பரமார்க்க வழிபாடு செய்தல் வேண்டும். அதாவது ஜீவகாருண்ய ஒழுக்கத்தையும், சத்விசாரத்தையும் கடைபிடித்தல் வேண்டும்.

(அ) ஜீவகாருண்யம் :—திருவருள் என்பது கடவுள் தயவு, கடவுள் இயற்கை விளக்கம்; ஜீவகாருண்யம்

என்பது ஜீவர்கள் தயவு: ஜீவ ஆன்ம விளக்கம். ஆதலால் சிறு நெருப்பைக் கொண்டு பெரு நெருப்பை உண்டு பண்ணிக் கொள்வதுபோல், சிறிய விளக்கமாகிய ஜீவ காருண்யத்தைக் கொண்டு பெரிய விளக்கமாகிய திருவருளைப் பெறலாம். இதை வள்ளலார்—

"வரும் உயிர் இரக்கம் பற்றியே உலக வழக்கில்
என் மனம் சென்றதோறும்
வெருவி நின அடிக்கே விண்ணப்பித்திருந்தேன்
வண்ணபபம் செய்கின்றேன இன்றும்
உருவ என் உயிர்தான் உயிர் இரக்கந்தான்
ஒன்றதே இரண்டிலே இரக்கம்
ஒருவில் என் உயிருப ஒருவுப என்னுள்ளத்து
ஒருவனே நின் பதத்து ஆணை"

"தலைவர்கள் எல்லாம் தனித்தனி வணங்கும்
தலைவனே இன்றும் என் உளமும
மலைவில் என் அறிவும் நானும் இவ் வுலக
வழக்கிலே உயிரிரக்கத்தால்
இலகுகின்றன நான் என்செய்வேன் இரக்கம்
என்னுயிர் என்னவே றிலையே
நிலைபெறும் இரக்கம் நீங்கில் என்உயிரும்
நீங்கும் திருஉளம் அறியும்"

"வாடிய பயிரைக் கண்டபோது எல்லாம்
வாடினேன் பசியினுல் இளைத்தே
வீடுதோறும் இரந்தும் பசியறுது அயர்ந்த
வெற்றரைக் கண்டு உளம் பதைத்தேன்
நீடிய பிணியால் வருந்துகின்றோர் என் நேருறக்
கண்டு உளம் துடித்தேன்
ஈடின் மானிகளாய் ஏழைகளாய் நெஞ்சு
இளைததவர் தமைக்கண்டே இளைத்தேன்"

என்ற பாடல்கள் மூலமும் மற்றும் இது போன்ற பாக்களினும் கூறுகிறார்.

ஜீவகாருண்யம் என்பது தன்னால் இயன்ற அளவிற்கு ஏனைய உயிர்களுக்கு உபகாரம் செய்தல; இது முடியாத நிலையில் ஆன்மநேயத் தொடர்பு அறிந்து தயாவடிவாய் நிற்றல், இந்த ஜீவகாருண்யமாகிய மனநெகிழ்ச்சி அல்லது மன உருக்கம் ஏற்பட்டு ஜீவகாருண்யம் செயல்பட்டால் திருவருள் வெளிப்படும். அருள் வெளிப்பட்டால் ஆன்ம நெகிழ்ச்சி அல்லது ஆன்ம உருக்கம் ஏற்பட்டு அன்பு வெளிப்படும். அன்பு வெளிப்பட்டால் சிவானுபவம் அல்லது பேரின்பம் கைகூடும். ஆகையால் எல்லா உயிர்களிடத்தும் தயவோடு கருணை செலுத்துதல அவசியம்

இந்த ஜீவகாருண்யம் முழுமையாய் வெளிப்படுவதற்குத் தடையாயுள்ளவை - ஜாதியாசாரம், மதாசாரம், சமயாசாரம், உலகாசாரம் முதலியவைகள். ஆதலால் இந்த ஆசாரங்கள் எல்லாம நீங்கி சர்வ வல்லமையுள்ள கடவுள் ஒருவரே! அவர் அருளை அடைவதே குறிக்கோள் என்ற சத்திய ஞானாசாரத்தைக் கடைபிடித்தால்தான் கடவுளுடைய முழுமையான அருளுக்கு நாம் பாத்திரமாவோம்.

எந்த ஜீவர்களிடத்தில் ஜீவகாருண்ய விருத்தியாகிய அருள் அதிகம் விளங்குகின்றதோ. அந்த ஜீவர்களிடத்தில் கடவுள் விளக்கம் அதிகமாயிருக்கும். ஆகையால் கடவுளிடத்தில் அன்பும், ஏனைய உயிர்களிடத்தில் ஜீவகாருண்யமும் செலுத்தல் அவசியம்.

மேற்கண்ட உண்மைகளை வள்ளலார் அருட்பாவில் மிக எளிமையாக கீழ்க்கண்டவாறு வெளிப்படுத்துகிறார்:-

"ஜீவகாருண்யமில்லாதபோது — அறிவும் அன்பும் தோன்றா, அவை தோன்றாதபோது கண்ணோட்டமும் ஒருமையும் உபகாரமும் விளங்கா; அவை விளங்காதபோது வலிய ஜீவர்களால் எளிய ஜீவர்கள் ஒழுக்கம் பொருமை

முதலானவைகளால் தடைபட்டழிந்துபோம். பின்பு வலிய ஜீவர்களின் ஒழுக்கங்களும் தாமச ஒழுக்கங்களாகி ஒருவ ரொழுக்கத்தில் மற்றொருவர் ஒழுக்கம் மதத்தினால் சோர் வடைந்து மாறுபட்டு அழிந்துபோம்.''

''ஜீவகாருண்யம் இல்லாதபோது அருள் விளக்கம் தோன்றாது; அது தோன்றாதபோது கடவுள்நிலை கை கூடாது; அது கூடாதபோது முத்தியின்பம் ஒருவரும் அடைய மாட்டார்கள்.''

ஆகையால் பேரின்பம் பெறுவதற்கு ஜீவகாருண்ய ஒழுக்கத்தினால் கடவுள்நிலை கைகூடி அருள் விளக்கம் ஏற் பட வேண்டும். ஆனால் இந்த ஜீவகாருண்யம், அபர ஜீவ காருண்யம் என்றும் பரஜீவகாருண்யம் என்றும் இரண்டு வகையாயுள்ளது. தாகம், பிணி, இச்சை, எளிமை, பயம் இவற்றினால் வரும் துன்பங்களைத் துடைப்பது அபர ஜீவ காருண்யம். பசி, கொலை இவற்றினால் வரும் துன்பங்களை நீக்குவது பரஜீவகாருண்யம். இதில் பரஜீவகாருண்யம் தான் சிறந்தது. இப்பர ஜீவகாருண்யத்திலும் பசியினால் வருந்துன்பத்தை நீக்குவதுதான் மிகச் சிறந்தது. ஏனெ னில் பசிக்குத் தயவினால் ஆகாரங்கொடுக்கத் துணிந்தவன் வேறுவகையால் ஜீவர்கள் இம்சைப்பட்டு அழிவதற்குச் சம்மதிக்க மாட்டான். இதை வள்ளலார் அருட்பா ஜீவ காருண்ய ஒழுக்கத்தில் குறிப்பிடுவதாவது :—

''மனிதர்களில், ஆண் மக்கள், பெண் மக்கள் என்று இருவகைப்பட்ட எல்லா மனிதர்களுக்கும், பசியால் வரும் நஷ்டங்களும், பசி நிவர்த்தியால் வரும் லாபங்களும், இன்பங்களும் பொதுவில் ஒரு தன்மையாயிருத்தலாலும்; பசியால் வரும் நஷ்டங்களையும் துன்பங்களையும் மன முதலான அந்தக்கரண விருத்தியினாலும் கண் முதலான இந்திரியங்களாலும் மிகவும் அறிந்து கொள்கின்ற ஆன்ம அறிவு ஒத்திருத்தலாலும்; மனிதர்களுக்கு ஊழ் வகை

யினுல் அருள் நியதியின்படி கொடுப்பிக்கின்ற ஆகார மட்டில ஜீவித்துத் தேகததை வைத்திருக்கக் கூடாமை யாலும், தங்கள் முயற்சியாலும், அறிவாலும், சுதந்திரத் தாலும் சம்பாதிக்கின்ற, ஆகாமிய ஆகாரத்தாலும, பசியை நீக்கித் தேகத்தை வைததிருக்க வேண்டுமாத லாலும், ஆகாமியத்தால் சம்பாதிக்கின்ற ஜீவ சுதந்திரம் மனிதர்களுக்கு அருளால் மிகவும் கொடுக்கப் பட்டபடி யாலும், ஊழ்வகையால் ஆகாரம் நேரிடாமல் பசித்து வருந்தும்படியாகவும், அந்தப் பசியை நீக்கும நிமித்தம் ஒருவரை ஒருவர் எதிர் பார்க்கும்படியாகவும், அவர் தயவினுல் ஆகாரம் கொடுத்து அடபசியை நீக்கி அவரை நன் முயற்சியில் செலுத்தவும், ஆகாரங் கொடுத்தவர் சித்தி முத்திகளை யடையவும், அருள் நியதியாக விதிக்கப் பட்டபடியாலும், மனித தேகம் மற்ற ஜீவ தேகம் போல இலேசில் எடுக்கக் கூடாததாலும் (1) மனித தேகத்தில் ஆன்ம விளக்கமும் அருள் விளக்கமும் மிகவும் விளங்குவ தாலும் (2) இந்த மனித தேகம் போனுல், மீளவும் இந்தத் தேகம் வருமென்கிற நிச்சய மில்லாமையாலும், (3) இந்த மனித தேகம் முத்தியின்பம் பெறுதற்கே எடுத்த தேகமாதலாலும் (4) இந்த மனித தேக மாத்திரமே முற் சிருஷ்டி தொடங்கிக் கடவுள் சமமதத்தால் சிருஷ்டிக்கப் பட்ட உயர்ந்த அறிவையுடைய தேகமாத லாலும (5) மனிதர்கள் மாத்திரம் பசியாற்றுவிக்கின்ற ஜீவகாருண்ய விதியைப் பொதுவில் அவசியம் உறுதி யாகப் பிடிக்க வேண்டுமென்றும், கடவுள் விதித்திருக் கின்றபடியால், பசியை ஆகாரத்கினுல் நிவர்த்தி செய்விக் கின்ற ஜீவகாருண்ய ஒழுக்கம் மனிதர்களிடத்தே பெரும் பான்மை நடத்த வேண்டுமென்று அறிய வேண்டும்''.

(ஆ) சத்விசாரம்: இந்த உடலில் நாம் எங்கிருந்து செயலபடுகிறோம்; நம்முடைய நிலை எப்படிப்பட்டது; நம்மை இயக்குகின்ற தெய்வத்தினுடைய நிலை எப்படிப்

பட்டது; என்ற விசாரிப்போடு இம்மனித உயிரின் மிகச் சிறிய எல்லைக்குட்பட்ட சிறுமையும், எல்லாமாகியும் எங்கும் உள்ளதாயும் உள்ள எல்லா வல்லமையும் கொண்ட கடவுளின் எல்லையற்ற பெருமையையும் தெரிந்து இம் மனித உயிரின் குறைகளையெல்லாம் களையுமாறு இறைவனிடம் பிரார்த்திக்க வேண்டும். இச்சத்விசாரத்தினுல் உலக இச்சைகளில் பற்றுதல் நீங்கும். உலக இச்சை பற்றுதல் நீங்கினுல நிராசை யுண்டாகும் இந்த நிராசை நிலையில் நிற்பதுதான் சரியையிற் சரியை, சரியையிற்கிரியை முதலிய படிகளில் 15ம் படியாகிய ஞானத்தில் யோகமாகிய ஞானயோகம் இதுவே முதற்சாதனம். இஞ் ஞான சாதனம் முதிர்ச்சியடைந்தால் முடிவான சிவானுபவம் பெறுவோம். இதைப்பற்றி வள்ளலார் அருட்பாவில் கூறுவது :—

"நீங்கள எல்லோரும் நல்ல விசாரணையில் இருந்து கொண்டிருங்கள்- அந்த விசாரணை எது என்ருல்—நாம் நம்முடைய நிலை எப்படிப்பட்டது? நமக்கு மேல் நம்மை அதிஷ்டிக்கின்ற தெய்வத்தினுடைய நிலை எப்படிப் பட்டது? என்று விசாரிக்க வேண்டியது. அதற்குத் தக்க படி நீங்கள் ஒருமித்தாவது அல்லது தனித்தனியாக வாவது, உங்களறிவிற்கும ஒழுசகத்திற்கும் ஒத்தவர்களுடன் கூடியாவது நல்ல விசாரணையிலிருங்கள்.

இவ்விசாரணை முகத்திலிருந்தால், நமது ஆன்ம அறிவை வளக்கமின்றி மூடிக்கொண்டிருக்கின்ற அனந்தத் திரைகளில் அழுத்தமாயிருக்கின்ற முதல் திரையாகிய பச்சைத் திரை முதலில் நீங்கி விடும். அது நீங்கினுல், மற்றத் திரைகள் அதிக விரைவில் நீங்கிப் போய்விடும். அந்தப் பசுமை வர்ணம் எப்படிப்பட்டதென்ருல், கருமைக்கு முதல் வர்ணமான பசுமையாக இருக்கின்றது. இப்படிப்பட்ட அழுத்தமான திரை நீங்க வேண்டுமென தோத்தரித்தும், தெய்வத்தை நினைத்தும், நமது குறையை உன்னியும், இவ்வண்ணமாக இருக்கின்றபோதும்,

டுபக்கின்றபோதும், இடைவிடாதும், இவ்விசாரத்தோடும், ஆண்டவர் நமக்கு உண்மை தெரிவிக்கவேண்டும் என்கின்ற முயற்சியுடனிருந்தால், தெரிய வேண்டியதைத் தெரிந்து கொள்ளலாம்''.

சிவ சுதந்திரர்களுக்கு வழிபாடு: பக்குவ நிலையிலுள்ள சிவ சுதந்திரர்களாகிய அண்டப் பகுதியினருக்கு சாதனம் ஒன்றும் வேண்டாம். இவர்கள் எல்லா உயிரையும் தன்னுயிரைப்போல் பார்க்கும் உணர்வை வருவித்துக் கொண்டால் போதும். இவர்கள் உள்ளம் தான் கடவுள் குடிக்கொண்டிருக்குமிடம் என்பதை—

''எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்
தம் உயிர்போல் எண்ணி உள்ளே
ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்
யாவர் அவர் உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்
இடமென நான் தெரிந்தேன் அந்த
வித்தகர் தம் அடிக்கு ஏவல் செய்ய என்
சிந்தை மிக விழைந்ததாலோ''

என்ற அருட்பாவினால் அறிந்து கொள்ளலாம். இவர்கள் மனத்தைக் கடந்து அறிவாய் விளங்கும சதாநிஷ்டர்கள். இவர்களுக்கு மரணமிலாப் பெருவாழ்வு கிட்டும். இதை வள்ளற்பெருமான்—

''சன்மார்க்க சாதனம்—சாதனங்கள் ஒன்றும் வேண்டாம். ஏதாவது ஓர் சாதனம சொல்லக் கேட்டு, அதன்படி நடந்தால் சிறு ஒளி உண்டாகும். அதைக் கண்டு பல் இளித்து இறுமாந்து கெட நேரிடும். ஆதலால் காலந் தாழ்த்தாது, எல்லா உயிரையும் தன்னுயிரைப் போலப் பார்க்கும் உணர்வை வருவித்துக் கொள்ளுதல் வேண்டும். இதுவே சாதனம், இந்தக் குணம் வந்தவன் எவனோ அவன்தான் இறந்தவரை எழுப்புகிறவன்;

அவனே ஆண்டவனுமாவான்'' என்று அருட்பாவில் விளக்கிக் கூறியிருக்கிறார். இதையே கீழ்வரும் பாடலிலும் காணலாம் :—

கருணையும் சிவமே பொருள் எனக் காணும்
காட்சியும் பெறுக மற்று எல்லாம்
மருள் நெறி என நீ எனக்கு அறிவித்த
வண்ணமே பெற்றிருக்கின்றேன்
இருள் நெறி மாயை வினைகளால் கலக்கம்
எய்தியது என் செய்வேன் எந்தாய்
தெருள் நிலையின்றிக் கலங்கினேன் எனினும்
சிறு நெறி பிடித்தது ஒன்றிலையே''

தடைகள் —இவ்வுயர்ந்த ஞானனுபவத்தைப் பெறுவதற்குத் தடையாயுள்ளவை—ஜாதியாசாரம், மதாசாரம், சமயாசாரம், உலகாசாரம் முதலியவைகள். ஆதலால் இந்த ஆசாரங்கள் எல்லாம் நீங்கி சர்வ வல்லமையுள்ள கடவுள் ஒருவரே. அவர் அருளை அடைவதே குறிக்கோள் என்ற சத்திய ஞானசாரத்தைக் கடைபிடித்தால்தான், கடவுளுடைய முழுமையான அருளை நாம் அடைய முடியும். இவர்கள்தான் சுத்த சன்மார்க்கத்திற்கு உரியவர்கள். இச்சுத்த சன்மார்க்கிகளுக்கு மறைப்பிற்கு அதிகாரமான பரணம் நீங்கி சுத்த சன்மாக்க நிலையாகய பேரின்ப சித்திப் பெருவாழ்வு கிட்டும். இதை வள்ளற் பெருமான்—

''சுத்த சன்மார்க்கத்திற்கு முக்கிய தடையாகிய சமயம், மதம், முதலிய மார்க்கங்களை முற்றும் பற்றறக் கைவிட்டவர்களும், காமக் குரோதம் முதலியவைகள் நேரிட்டகாலத்தில் ஞான அறிவினல் தடுத்துக் கொள்பவரும், கொலை புலை தவிர்த்தவர்களும், ஆகிய இவர்கள் தான், சுத்த சன்மார்க்கத்திற்கு உரியவர்கள் ஆவார்கள். மரணம், பிணி, மூப்பு, பயம் துன்பம், முதலியவைகளைத்

தவிர்த்துக் கொள்வார்கள். அதாவது செயற்கையாகிய குணங்களை நன்முயற்சியால் தடுத்து கொள்பவர்களுக்குக் கேவலாதிகார மரணம் நீங்கும். அப்படி இல்லாது இவ் விடம் காத்திருப்பவர்கள் மரணத்தைத் தவிர்த்துக் கொள்ள மாட்டார்கள்: அருள் விளங்கு காலததில் அவரவர்கள் பரிபாகத்திற்குத் தக்கதாக இகலோக போகததை மட்டும் அனுபவிக்கக் கூடும். பரலோக போகமாகிய ஞான சித்திகளைப் பெற மாட்டார்கள்.

சாகாதவனே சன்மார்க்கி—சன்மார்க்கத்தின் முடிபு சாகாத கல்வியைத் தெரிவிப்பதேயன்றி வேறில்லை. சாகிறவன் சன்மார்க்க நிலையைப் பெற்றவனல்லன். சாகாதவனே சன்மார்க்கி, என்று அருட்பாவில விளக்குகிறார். இதையே பாடலில்

''பற்றிய பற்றனைத்தையும் பற்றற விட்டு அருளம்பலப்
பற்றே பற்றுமினோ என்று மிறவீரே''

என்று கூறுகிறார்.

**ஞானம்:** ஞானம் மூன்று வகைப்படும். அவை (1) உபாய ஞானம் (2) உண்மை ஞானம், (3) அனுபவ ஞானம். இதில் உபாய மார்க்கத்தைக் கடைபிடித்து புற அனுபவமாகிய கரும சித்தியை அல்லது யோக சித்தியை அடைவது மந்த ஞாயம். ஆனால் அக அனுபவம் அடைதல் உண்மை மார்க்கம். இவ்வுண்மை மார்க்கம் நீக்கமற்ற சொரூப ஞானத்தை அளிக்கும். ஆகையால் புற அனுபவத்தைப் பெறும் உபாய மார்க்கத்தைக் கைவிட்டு விட்டு அக அனுபவத்தை அடைய சுத்த சன்மார்க்கமாகிய உண்மை மார்க்கத்தைக் கடைபிடிக்க வேண்டும் இதை வள்ளலார் திருவருட்பாவில் கீழககண்டவாறு வலியுறுததுகிறார்:—''அபர மார்க்கத்தில் சிலர் உப்பு வகைகளின் பேதமென்றும், ஓஷதி பேதமென்றும், பூத பேதமென்றும் யோகானுபவங்களைச் சொல்வது உபாய மார்க்கம்.

அகஅனுபவமே உண்மை மார்க்கம். உபாய வகையாகிய அபர மார்க்கம் தேக பூஷ்ணுதி காமிய சித்தியைத்தரும். உண்மை மார்க்கம் நீக்கமற்ற சொரூப ஞானத்தைத் தருமென்றறிக. மேற்படி உபாயங்களை ஒருவாறு தெரிவிப்பதும் சைவ சமயங்கள் தவிரவேறு எவ்வித சமயங்களிலுமில்லை. அப்படி இருப்பதாகச் சொல்லியிருப்பதும் ஏகதேசமென்றறியவும். மேற்படி ஏகதேசங்கள் மந்திரங்களிலும் மேற்படி மூன்றும் வழங்குகின்றபடியால், ஒன்பது மாற்றுக்கு மேற்பட்ட தங்கரேக்கில் பஞ்சாட்சரத்தை அடைத்து விக்கிரகத்தின் அடியில் வைக்க, மகத்துவங்கள் உண்டாகும். மேற்படி உயர்வுடைய தங்கத்தில் விக்கிரகஞ்செய்து வைத்து ஔஷதியாதி லவணங்களை அதற்குச் சேர்த்து வைத்தால் விசேட சித்திவிளங்கும். இது திரிசியக் காட்சி. (மனம், வாக்கு, காயத்தால் காணக்கூடிய அபர மார்க்கக் காட்சி) சுத்த சன்மார்க்கத்திற்கு உபாய வகைகளான அபரமார்க்கக் காட்சி கூடாது. பரமார்க்கமான அக அனுபவமே உண்மை மார்க்கம். மேற்படி மூன்றையும் லக்ஷியமாகவே கொள்க. மூன்று என்பது (வாசக மந்திரம், வாச்சிய திரிசயக்காட்சி, இலட்சியானுபவம்) உபாய வகையான வாச்சிய திரிசயக் காட்சிகள் பரோபகாரம். ஆதலால் சாகாத் தலை, வேகாக்கால், போகாப் புனல் என்பவை இரண்டு புறத்திலுமுள. (உபாய வகையை நம்புதல் கூடாது; உண்மையை நம்புதல் வேண்டும்; இது ரகசியம்) இந்த உண்மை ஞானத்தைக் கடைபிடித்து அனுபவ சாத்தியம் ஏற்பட்டு விட்டால் சுத்த சன்மார்க்கானுபவ ஞானம் ஏற்பட்டுவிடும். இதுதான் நாம் அடைய வேண்டிய பேறு.

**அருள்ஒளி :** அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என்கிற நான்கு இடத்திலும் கடவுள் ஒளி உள்ளது, இவ்வருளொளி காரியத்திலுள்ள விபரம் கீழ்வருமாறு ;

உடலில்—அகமாகிய ஆன்மா-ஆன்ம அறிவு — எதையும் தானுக அறிதல். அகப்புறமாகிய ஜீவன்-ஜீவ அறிவு.

ஒரு பொருளின் உபயோகத்தை இன்னதென்று தெரிதல்; புறமாகிய கரணம் :- கரண அறிவு-ஒரு பொருளின் நாம ரூபத்தையும், குணகுற்றங்களையும் விசாரித்து அறிதல்; புறப்புறமாகிய இந்திரியம்-இந்திரிய அறிவு- ஒரு பொருளி னது நாம, ரூப, குண, குற்றங்களை விசாரியாமல் அப் பொருளைக் காணுதல். அறிவித்தாலும், இந்திரியம் கருவி யாதலால், அறிந்து கொள்ளாதது.

உலகில்—அகம்—நெருப்பு
அகப்புறம்—சூரியன்
புறம்—சந்திரன்
புறப்புறம்—நட்சத்திரம்

ஆகவே, மேற்கண்ட எட்டு இடத்திலும் அருள் ஒளி காரி யத்தாலுள்ளது. இதுபோல் காரணத்தாலுள்ள இடம்- உடலில்-புருவமத்தி; உலகில்-பரமாகாசம்; காரியகாரணத் தாலுள்ள இடம்-உடலில்-விந்து, நாதம்; உலகில்-மின்னல் இடி; இதைத் தவிர ஆன்மஜோதியுள் அருட்ஜோதி, அருட் ஜோதியுள் சிவஜோதியாக ஜோதியுட் ஜோதயுட் ஜோதி யாயும் உள்ளது. மேற்கூறிய அகமாகிய ஆன்ம ஒளியே- ஞானசபை அவ்வொளிக்குள் ஒளியே-கடவுள்; அவ்வுள் ளொளியின் அசைவே நடனம். இதைத்தான் ஞானகாச நடனமென்றும், ஆனந்தக் கூத்து என்றும் கூறுவது. ஆகவே நாம் தினம் மேற்கூறித்த ஆன்ம ஒளியே சபை யாகவும், அதன் உள்ளொளியே பதியாகவும் கண்டு வணங்க வேண்டும்.

மேலும் மேற்படி கடவுள் இருக்கும் பொது இடங்கள் ஐந்து. இவைகள் ஐந்து சபைகளாகச் சொல்லபபடும்.

நிலம் — பொற்சபை —ஞானசத்தி
நீர்—வெள்ளிச்சபை—செயற்சத்தி
நெருபபு—தெய்வ சபை —பொருட்சத்தி
காற்று—நிருத்த சபை—யோக சத்தி
ஆகாயம்— சிற்சபை —ஆதி சத்தி

இவற்றின் மூலம் தோற்றுவித்தல், வாழ்வித்தல், துரிசு நீக்குவித்தல்; பக்குவம் வருவித்தல், விளக்கம் செய்வித்தல் என்ற ஐந்தொழிலையும் இவற்றிற்கும் அப்பாற்பட்ட ஞான பஞ்ச கிருத்தியத்தையும் கடவுள் செய்கிறார்.

மனித ஆன்மா, திருவருளால் தன் உண்மையை அறிந்து, அந்த அருட்சுடர் காட்டும் அருள் ஒளி வழியே நடந்து, அருட்ஜோதியின் அருட்பூரணத்தை அடையக் கூடிய ஒன்று. அவ்வான்மாவின் தொடக்க நிலையையும் முடிவு நிலையையும் அருளம்பலத்தில் தான் உள்ளபடி அறிய முடியும்.

எல்லா இடத்திலும் நீக்கமற நிறைந்துள்ள அருள் ஒளியை நாம் நம் ஆன்ம வடிவிலிருந்து அறிந்து கொள்ளலாம். அருட்பெருஞ்ஜோதியின் எல்லாம் வல்ல எல்லையிலா ஒளி நிலையும் அருட்ஜோதியின் கூறான ஆன்மாவின் எல்லைக்குட்பட்ட ஒளி நிலையும் ஒரே தன்மையுள்ளது தான். ஆனால் இரு வேறு நிலையில் உள்ளது. எல்லையற்ற நிலையில் உள்ள அருட்பெருஞ்ஜோதியின் முழுமையான பெரிய உண்மையை, எல்லைக்குட்பட்ட சிறிய நிலையில் உள்ள நாம் அகத்தே அறிந்து அனுபவிக்க முடியும். அளப்பரிய அருட்பெருஞ்ஜோதி நிலையாகிய சுயஞ்ஜோதி நிலையே பரமான்மா; அக ஆன்ம சிற்ஜோதி நிலையாகிய மனித நிலையே ஜீவான்மா. இந்த ஜீவான்மா, பரமான்ம நிலையை அதாவது கடவுள் நிலையை அடைவதே முழுமையான இன்பம் அல்லது பிறவிப் பயன். இவ்வுண்மையை உணர்ந்து, இம்மண்ணுலகில் மனிதனாக வாழ்ந்து, இவ்வுயர் நிலையை அடைந்தவர் அருட்பிரகாச வள்ளலார் அவர்கள். அவருக்கு ஆண்டவர் அளித்த நிலையைக் கீழ்க் கண்டவாறு அருட்பெருஞ்ஜோதி அகவலில் கூறுகின்றார்:—

என்னையும் நின்னையும் ஓர் உருவாக்கியான் உன்னியபடி
எலாம் சீருறச் செய்து உயிர்த் திறம்பெற அழியா

அருள் அமுது அளித்தனை அருள்நிலை ஏற்றினை
அருள் அறிவு அளித்தனை அருட்பெருஞ்ஜோதி"
"உலகுயிர்த் திரளெலாம் ஒளிநெறி பெற்றிட
இலகும் ஐந்தொழிலையும் யான் செயத்தந்தனை"
"மூவரும தேவரும் முத்தரும் சித்தரும்
யாவரும் பெற்றிடா இயல் எனக்களித்தனை"
"சித்திகள் அனைத்தையும் தெளிவித்து எனக்கே
சத்திய நிலைதனைத் தயவினில் தந்தனை"

பாடலில் கூறுவது :—

"காற்றாலே புவியாலே, ககனமதனாலே
கனலாலே புனலாலே, கதிராதியாலே
கூற்றாலே பிணியாலே கொலைக்கருவியாலே
சோலாலே பிறவியற்றுங் கொடுஞ்செயல்களாலே
வேற்றாலே எஞ்ஞான்றும் அழியாதே விளங்கும்
மெய்யளிக்க வேண்டும் என்றேன்
விரைந்தளித்தான் எனக்கே"

உலகில் உள்ளோரெல்லாம் பெருநெறி பற்றி வாழ்ந்திட. தோற்றுவித்தல், வாழ்வித்தல், துரிசு நீக்குவித்தல், பக்குவம் வருவித்தல், விளக்கம் செய்வித்தல், என்னும் ஐந்தொழிலையும் செய்யும் திறத்தைப் பெற்ற வள்ளலாரும், அருட்பெருஞ்ஜோதியாகிய கடவுளும் ஒன்றே. கடவுளின் அருள் வடிவம் அனைத்தையும் அருளால் அடைந்து தானே அருளாகி அருளாட்சி செய்து வருகிறார் வள்ளலார் எல்லா வல்லமையும் பெற்ற வள்ளலார். அவரிடம் சரியையைக் கடைபிடித்து பக்திசெலுத்துபவர்களுக்கு சிலையிலும், கிரியையைக் கடைபிடிக்கும் கர்மகாண்டிகளுக்கு ஜோதியிலும், மனதை அடக்கும் யோகத்தைக் கடைபிடிக்கும் யோகிகளுக்கு இதயத்திலும், ஞானத்தைக் கடைபிடிக்கும் ஞானிகளாகிய சுத்த சன்மார்க்கிகளுக்கு எங்கும் எதிலும் அனேக வடிவத்தில் காட்சியளிக்கின்றார். ஆகையால் வள்ளலார் காட்டிய ஞானப் பாதையில் செல்வோமாக!